எடுத்திடுகெட்டிபையின்பங்குனிரவே
கொடுத்திடுலோகங்குமுறப்பழுத்திடும்
தொடுத்திடும்பூசைசையைச்சுந்தரம்போலவே
முடித்திடுஞ்சோதிமுழுநீலவர்ணமே. 279

வர்ணம்நிறைந்தவாசியைப்போற்றியே
தருணமதாகித்தன்னிலைபற்றிடு
சொர்ணமதானசோதிகண்டபின்
சரணமென்றுநீதாளிணைப்பூசியே. 280

காகபாஷாணம்.

பூசியகாகம்புனைந்தபாஷாணம்
பேசவேனென்றுயப்பிரியமாய்க்கேளுங்கள்
வீசியகெந்தம்விரிந்தமேனிசிலை
மாசில்லாவீரம்வெடிவெள்ளைதாரமே. 281

தாரமுஞ்சூதமுந்தன்னுகமும்பச்சையும்
பாரமாய்க்கூட்டிப்பதியப்பொடித்திடு
காரமாயபச்செப்பிலடக்கியே
சாரமாய்ச்சட்டிதனிலிட்டெரித்திடே. 282

எரிப்பதுநாலுசாமமெரித்தபின்
குறிப்புடன்சட்டிகுளுறவெடுத்திடு
தரிப்புடனபச்செம்பைத்தகர்த்திட
கருப்புள்ளகாகபாஷாணமாகுமே. 283

கருனைபாஷாணம்.

காணவேசொர்ணக்கருனைப்பாஷாணத்தை
பூணவேசொல்வோம்புத்தியாய்க்கேளுங்கள்
தோணவேலிங்கமுந்தொகுசிலைதாரமும்
பேணவேசூதமும்பொரிதாளநாகமே. 284

நாகமும்வீரமும்நலமானகாரமும்
பாகமாயொன்றாய்ப்படியப்பொடித்திடு

ஆகமாந் தங்கமகலிலடக்கியே
வேகமாய்த் தாழியில் விடுத்து மணலிட்டிடே. 285

மண்ணிட்டமர்த்தி வாலைப்படுப்பினில்
கண்ணிட்டு நோக்கிக் கதிக்கவெரித்திடு
தன்றைத்து தின்ற நசரக்குடன் தங்கமும்
ஒன்றைத்துக் கூடியுருகி இறுகுமே. 286

இறுகிமணி போலிருக்கும் பரியது
மறுகியலோகத்தில் மாட்டிடத் தங்கமாம்
உருகிய நல்மணியொன்றுனை பூரணம்
தருகியசொர்ணப்பாஷாணந் தங்கமே. 287

## லவணபாஷாணம்.

தங்கலவணமுகிலானச் சத்துகேள்
பொங்கியகாரமும் புகழானசாரமும்
தங்கியவீரமுந் தருவானபூரமும்
அங்கமனோசிலை அரிதாரங் கந்தகமே. 288

கூதமும் லிங்கமுந் துடியான வெடியுடன்
நீதமாய்க்கட்டி நிறுத்துப் பொடித்திடு
பாதமாங்குப்பியில் பதுக்குமண் சீலைசெய்
சீதமண் தாழியில் செலுத்திமண் செம்பிடே. 289

செம்பிமணலிட்டுச் சீராயடுப்பினில்
கம்பியிராமல் கதிக்க அனலிடு
வெம்பிமுச்சாமம் வெந்து இறுகிடும்
கொம்மையக்குப்பியைக் குளமாயெடுத்திடே. 290

எடுத்திடு குப்பியுமிளகியுருகியே
தொடுத்திடுங்கட்டியாய்ச் சுருங்கியிறுகிடும்
அடுத்திடும் வேளைக்கு ஆதியமிது
பகுத்தலவணப்பாஷாணஞ் சொன்னமே. 291

## நாகபாஷாணம்.

சுன்னம்நாகந்துலங்குட்பாஷாணத்தை
இன்னமார்க்கேளுநீசிவமானகுருமுந்
கன்னுனைலிங்கமுங்காரவங்கப்பச்சையும்
பொன்னுனைகாரமும்போட்டாலுங்காரமே. 292

காரமேபொடொன்றாய்க்கல்வத்திட்டுப்பொடித்திடு
பாரமாங்குகையில்பதித்துமேல்மூடியே
காரமென்சீலைசமமாய்ப்பொதிந்தபின்
சீராய்கெசப்புடம்செய்கனல்மூட்டிடே. 293

மூட்டியனைலதுமூதிரக்கவிழ்ந்தபின்
நாட்டுங்குகையைநயமாயுடைத்திடு
பூட்டுமருந்ததுபொன்னிறமாகுமே
வாட்டியசாயம்போல்வலிந்ததுஇருக்குமே. 294

இருஙிமணிபோலிருந்திடுங்கட்டிதான்
பருகியநாகப்பாஷாணமானது
சொருகிவேர்கந்தோன்றப்பழுத்திடும்
குருவுரைகண்டதன்கட்டிமுடித்திடே. 295

முடித்தபாஷாணமூட்டத்திரண்டுமே
வெடித்தபின்குப்போலவைக்குமுறைசொன்னேன்
அடுத்தமுறையிதுஆருமொழிந்திலார்
எடுத்தமுடிவிதனைஞானமும்பார்த்திடே. 296

என்னுமும்பார்த்தவர்க்கிடரும்வினையில்லை
தன்னுற்றிந்துதானேதுலங்கிடும்
கண்ணார்நிறந்துநம்பூரத்திடமாம்
விண்ணார்மடபதிமெய்யானதேசியே. 297

தேசிகன்சொன்னசிவஞானபோதகம்
நேசமதாகநினைவிலறிந்தபின்

வாசிதன்னொளிபோல்வன்னித்தேவென் றாறும்
பேசியமந்திரம்பெரிதாம்பொருளிதே. 298

பொருளிதுவென் றுபோற்றினார்சித்தர்கள்
திருவனமந்திரஞ்செகத்திலறிந்தால்
உரிதானமானிடருமிப்பசப்பியே
தருவாறிலதனைச்சாரார்பாவியே. 299

பாவிபல நூல்படித் துபலந்தன்னைத்
தாவியறியாமல்சனப்பட்டுருவுவான்
கூவியசொல்லைக்குறியாப்பதியாமல்
ஆவிபதறி ஆசிப்பான்கோவியே. 300

கோவில்கள்சென் றுகொலைவலைதழிப்பான்
தாவிதமானசமயமறிந்திலான்
நாவிபொருளை நலமென் றுணர்ந்திடான்
தாவியதீபந்துலங்காத்துரோகியே. 301

துலங்கும்வழிவைச்சொல் லுவேன்சுந்தரா
நலங்கொண்டுழலைநடுவைப்பிடித்திடு
மலங்கொண்டு அந்தமதியையிறக்கிடே
கலங்கொண்டபூரணந்தானே அந்ததிடே. 302

நந்திக்கொழுந்துநடுவான முச்சுடர்
உந்திக்குகீழ்பொலிகொண்டவெண்மதி
அந்திக்குமுத்தி அறிவான்பூரணம்
சிந்தித்துவாசியைத்திடத்தில்வைத்திடே. 303

வைப்புசரக்குவகைகளுடன்சொன்னேன்
தப்புவராமல்காணகையறிந்திடு
அப்பினிலுப்புஅமர்ந்திடும்வாறுபோல்
செப்பியமந்திரஞ்சேரவுஞ்சித்தியே. 20

பாஷாணத்தின்பெயர்.

சித்தியதாகச்சிறந்துபிறந்திடும்
முத்திச்சாக்கின்முறைமைசொல்லுகிறேன்
அத்திரற்கடகம்அறிவானகோளகம்
வெகுதியதாம்வில்சபானகுதமே. 205

ஆதாளகெந்தித்தூடுவீரபாஷாணம்
மாதபக்காந்தம்வழுத்தபாஷாணம்
சீதமுமர்தம்சிப்பந்தபாஷாணம்
கோதுபத்தொட்டிக்குதிரைப்பாஷாணமே. 306

பாஷாணஞ்சங்கபாம்பருத்தகெவுரி
பாஷாணதுத்தம்அபக்காந்தபாஷாணம்
கோசாமலைவெள்ளடுக்கொடிலிங்கபாஷாணம்
தாக்கம்பெரண்டாத்தாளகமென்னுமே. 307

என்னுமறுசிலேயகாவின்பல்லோடு
கன்னுங்காளாங்கிக்கற்பரிஅஞ்சனம்
மின்னுங்கச்சாலம்வீரசிதங்கமாம்
சின்னகார்முகில்சிலாமதமென்னுமே. 308

என்னுமப்பிரகம்வகாந்தவெள்ளையுஞ்
சொன்னதென்றன்றுஞ்சுகமாயப்பிறந்தது
தன்னருள்தன்றல்தனித்தபாஷாணத்தை
உன்னியேபார்த்தவுறுதியாய்க்கண்டிடே. 309

உறுதிபெட்டெடுவுகந்தபாஷாணத்தில்
சுருதியாயவைப்பில்சொன்னவன்றன்குதான்
குருமுறைதானென்றுகுவிந்துமனந்தனில்
பெருமையென்றுறைப்பேணிப்பணிந்திடே. 310

பேணிப்பணிந்துபிலமாகநின்றிடு
ஆணிப்பொன்மாற்றுஅதிகதெரிசனந்

காணிக்கைகொண்டுகடல்மலைபோடினும்
ஏணித்துருவம்போலெண்ணூறுமிட்டுமே. 311

எண்ணூறுமந்திரமிருளையகற்றிடும்
எண்ணூறுமந்திரமேகதிராமயம்
எண்ணூறுமந்திரமின்பச்சுடரொளி
எண்ணூறுமந்திரமேகாந்ததீபமே. 302

ஏகாந்ததீபமிருளையகற்றிடும்
ஏகாந்ததீபமெண்டிசையண்டமாம்
ஏகாந்ததீபமிருதயமானது
ஏகாந்தமாகவெண்ணூறும்பார்த்திடே. 303

எண்ணூறும்போலவெதுவுஞ்சொல்லாதையா
கண்ணூர்வாறுகருணைவளர்ந்திடும்
நண்ணும்பொருளிதுநற்குருதீபம்போல்
பண்ணும்பலபொருள்பாரிதுக்கொவ்வாதே. 304

அவ்வாக்கசடர்ஊணரில்மிகுத்தவர்
செவ்வாகமன்றிசிரமிகெட்டவர்
கள்வாட்பொருளைக்கவ்வினைமாந்தர்கள்
எவ்வாறுகந்தாலுமளிதாயிகழ்ந்திடே. 305

காரசாரம்.

இகழாதகாரசாரத்தியல்புகேள்
அகலாவழலையாதிபூநீருடன்
இகழாதசாரமுமியல்சத்திசாரமும்
பகலெவாச்சாரமும்பதிகநிச்சாரமே. 306

சாரமேகம்பச்சாரமாகுசீனமும்
காரம்வெண்காரங்கதித்தால்கூடனும்
பாரகற்பூரம்பதிவாமழரியும்
சீருகல்லுப்புசிறுக்குமிணைங்கனே. 307

இணங்கியஇந்துக்கேதுவாம்வளிலும்
குணங்குஞ்சவுடுக்கோநிலாலவணம்
வணங்கியகெந்திலவணமதிஞெடு
பிணங்கும்பிடாலுப்புபோர்சிந்துலவணமே. 318

லவணம்பொன்னம்பரம்நாலுமீன்பார்த்தவன்
கடலுரைதாணக்காசுலவணமூன்
மவுணத்துடனேகாரசாரங்கள்தான்
புவணந்தனில்வளர்பொருளிருபத்தஞ்சே. 319

அய்யஞ்சுகாரசாரத்தடைவுகள்
மெய்யஞ்சுபார்த்துவேண்டியெடுத்திடு
செய்யுந்தொழிலுக்கிதுமூலமாகிடும்
வையகந்தன்னில்வளருப்புகண்டிடே. 320

கண்டிடுமூலங்கருணைபராபரம்
நின்றிடுமந்தநேர்மைதன்னிலே
சென்றிடும்வாசிதீபக்கொழுந்தினில்
நின்றிடுந்தேகமுறுதியாஞ்சித்தியே. 321

உபாசந்தின்பெயர்.

சித்திக்குரேசகம்சிவமயமாகிடும்
பத்திக்கும்பூரகம்பதிலாசைத்தியாம்
முத்திக்கும்பகமுதலாம்பராபரம்
சுத்திக்குமூலஞ்சுடரொளிதன்னிலே. 322

தன்னிலேவன்னிதானந்தொடுகுறி
விண்ணிலேயந்நம்விபரமறிந்திடு
முன்னிலேயானமுத்திநடுமனே
வண்ணாதின்கண்ணின்கருணைகண்பார்த்திடே. 323

பாத்திடும்பாசம்பன்னூற்றிருபது
சாத்திடக்கேளு தன்னருள்தன்னிறால்
மாத்துறுபச்சைவருபொன்னிமிளையும்
காத்திடுங்கஞ்சலோகநிமிளையே. 324

நிமிளைரசிதம்நேர்காந்த நிமிளையும்
கமழ்பொன்னப்பிரகங்கடியசிகப்புடன்
தமிழ்கிஷ்ணசுவேதந்தன்னூசிகாந்தம்
அமூழ்வாக்கரந்தமானஉருளையே. 325

உருளைகல்காந்தமுகந்தகல்நாறு
தருசாத்திரவேதிசலாசத்துகல்மதம்
கரு அஞ்சனக்கல்கருங்கல்ப்படிகமும்
வளர்சுத்தநீரிவளர்ரசவற்கமே. 326

வற்கங்கெருடன்வருபட்சியோடு
சுத்தஎலும்புசுகமானசெங்கல்
நத்தைகிளிஞ்சிநல்லாமைமுட்டை
உத்தமம்நன்றுவுடனாகவண்டதே. 327

வண்டானைகொம்புமாடுடன்பன்ணியும்
கண்டாங்கலங்கொம்புகதித்தபூனைகமுங்
ஒன்றானஇந்திரமுடன்பல்லுச்செவ்வட்டை
நன்றானதவளைநற்கோழிகாடியே. 328

காடுநல்சங்குகதித்தநல்சிப்பியும்
சாடுநவரெத்தினந்தனில்வகையொன்பதும்
திரடுகெண்டகச்சிலைநெருசுடலைக்கல்
மரடுமஞ்சள்கல்மாக்கல்லுதேக்கல்லே. 329

தேக்குவளைக்கல்சிலாவாகஞ்சிலா நாகம்
வாக்கன்னபேதிவளர்சத்திபேதியுந்
தாக்குபொன்பேதிதருமாங்கிஷபேதி
பூக்குமூவர்மண்பூசுக்கல்கிட்டமே. 330

கிட்டங்கருமணல்செம்மணல்சுத்தமண்
திட்டமுன்னூலமட்டுக்கால்சீறுங்கருவண்டு
பட்டெலிமுள்ளுப்பரும்பன்றிமுள்ளுடன்
சட்டங்கடல்நுரைத்தான்மீனெலும்புமே. 331

எலும்புமூள் ச்சங்குஇயல்புகோரோசினை
கரும்புத்தாம்பழங்கருணைகப்பச்சையும்
செழும்புகழ்மரகதஞ்சேர்வெள்ளைசுக்கான்
சழுங்கறத்தண்டுக்கரக்காசசிலையே. 332

சிலைவளர்காண்டாமிருகங்கல்பாச்சியும்
கலைமதார்சிலைக்கடுக்குமாங்கிஷச்சிலை
மலைவளர்சாளக்கிராமந்துளிர்கல்
துலைதெரிபடிகக்கதூல்வியேகாவியே. 333

காவியச்செம்புமணல்நாகமண்ணுடன்
தூவியவங்கமண் துள்ளுநவெ ளியமண்
மேவியவெள்ளிமண்மேருவாம்ஏமமண்
தாவியலோகமண்தனிமயிலிறகுமே. 334

இறகுகருஞ்சுக்கரன்இயல்பானகானக்கல்
குறுகுறுந்தக்கல்கூறுவேனின்னங்கேள்
திருகுமிரசிதசிலையேமசிலையொடும்
மருவுநாகச்சிலைவளர்வங்கச்சிலையே. 335

வங்கம்வெள்ளியச்சிலையாமயச்சிலை
அங்கத்திராச்சிலையணிவெங்கலமலை
தங்குபித்தளைமலைத்தனிச்செம்புமாமலை
சங்கமூபாசந்தானூற்றிருபதே. 336

நூற்றிருபதுரசம்நுண்மையாய்க்கண்டபின்
தாக்கியவாதமுந்தனிவசியஞ்சனம்
மாத்துமறப்புடன்வகைநாலுஞ்சித்தியாம்
தேத்தியமூலஞ்சித்தெனக்காணுமே. 337

காணும்புருவமும்கமலத்தமூர்தமும்
தோணுகற்றீபந்தொடுகுறிதன்னிலே
பேணவேவாசிபிராணத்திருத்திடில்
ஆணுகம்நீங்கிஅதிகமாஞ்சித்தியே. 338

சித்திக்குமூலஞ்சீருடன்சொல்லுவேன்
முத்திக்குவதில்முன்னிலைப்பத்தியே
பத்தியதாகப்பாரம்பதியென
சித்தம்பெருகி நீசிம்மென்று நின்றிடே. 339

நின்றிட தியானம் நிலைக்குமிதி தனில்
விண்டிடப்போகா விண்டிதான்விழும்
அண்டமும்பிண்டமுமடங்குந் தியானமாங்
கண்டிடுமாதிக்கருணைப்பொருளிதே. 340

கருணைப்பொருளிதைக்காக்கச்சிவமது
கருணைப்பொருளிதாய்கண்டிடச்சொல்லுவோங்
கருணை அங் உங் அும் மென்றுகாரணமாக்
கருணைவளர்ந்திடக்காற்சிலைஞ்சித்தியே. 341

சிந்திசிவமதுசிம்மதிலெட்டிட
முந்திக்கொழுந்துமுனைகொண்டுலாவியே
பத்திச்சுழியைப்பளீரென்றிருத்திடும்
நித்தியதீபம் நிலைக்குநிலையிதே. 342

நிலையதைக்கண்டு நினைவாய்ஜெபித்திடு
கலைபன்னிரண்டுங்கருத்திலடங்கிடுந்
தலைதனில்தீபந்தானேதுலங்கிடுந்
துலையிலலைநெற்றிச்சிருமையமதாமே. 343

தாமேதுருவந்தன்னிலைக்கண்டபின்
நாமேதுண்டுநடுமனைசித்தியாம்
ஆமெனவாசிஆனந்தபோதமாம்
வாமம்பெருகிவளரும்பூரணமே. 344

பூரணமானபுதுமலர்வாவியைத்
தாரணமாகத்தனதாயறிந்தபின்
சீரணமாகச்சிந்தைதிறப்படும்
மாரணஞ்செய்துயதிமைக்களைந்திடே. 345

களைந்திடும்போது காரணாரவிடை
அலைந்தது நீபோற்றி ஆவியைக்கண்டால்
விளைந்திடும்பிறவியோது ஆற்றிடும்
நுளைந்திடும்வாசிநூலேணியாமே. 346

எளியமூலைவிதமாயறிந்தபின்
ஆணிக்கரத்தாலசையாதிருத்திடும்
பூணித்தமரில்புகுந்துறவாகிறாய்
தோணிக்கரசன்துலங்குவான்சித்தியே. 347

சித்தியாம்பூரணஞ்செப்புவகைகேள்
சத்தியுஞ்சிவமுந்தன்னொடுபூரணம்
நித்தியம்போற்றிநிலைமையறிந்தபின்
பத்திநின்றையம்பதறியொடுங்குமே. 348

ஒடுங்கநிலைதனிலோடியொடுங்கினால்
அடங்கியவாசியதனுள்ளடங்கிடும்
மடங்குந்திரோதகைமாசறவிந்துவில்
ஒடுங்குங்கதிரொளியுண்மையதாகுமே. 349

துருசுசத்துருமித்துரு.

ஆகுந்துருசு அடங்கியசத்துரு
பாகுஞ்சவுடுப்பருந்தொட்டி அஞ்சனம்
வேகுமிளங்கன்வெண்சீனஞ்சூடனும்
பாகுலம்பிரகம்பாஷாணங்கல்லுப்பே. 350

உப்புஇந்துப்புஉருகாந்தநாகமும்
தப்புநல்வங்கஞ்சவுக்காரந்தன்னொடு
பெப்பாந்துருசுக்குவேண்டியசத்துரு
ஒப்பானமித்துருவுண்மையைக்கேளுமே. 351

கெளரிதாரங்கெடிசாரதாரமும்
வாழுநற்சூதம்வளர்கெந்திவீரமும்
நாளுங்கபரிநற்சிலைபூரமும்
தாழுங்கெவுரிதன்பண்ணைலிங்கமே. 352

சாரசத்துருமித்துரு.

லிங்கமுடனே நாரமித்துரு
அங்கமதாக அறிவாலறிந்துநீ
சங்கையுடனேசத்துருகொன்றிடும்
பங்க ாமித்துருபதறியெழும்புமே. 353

எழும்பியசாரத்தியல்பானசத்துரு
நலம்பெறச்சொல்லுவேனல்லகல்லுப்புடன்
கொழும்பியிந்துப்புக்கூ றும்பாடிகியம்
வளம்பியகாந்தம்வங்கம்வளகியே. 354

வளகியென்றண்ட மடி ந்திடுஞ்சுக்கான்
பழகுநல்சுன்னம்பாரில்கடல்நுரை
அழகுகிளிஞ்சி அப்பிரகந்தன்னெடு
உளையுஞ்சவுடுவுடன்காரசயமே. 355

சயமோடெல்லாமிலங்கியசத்துரு
தாயகமாகத்தன்மையறிந்திடும்
நேயமதாகநின்றிடுமித்துரு
வாய்மையறிந்துவகையுடன்கேளுமே. 356

கேளடாதாரங்கெடுசிலைகெந்தியும்
வானடாவீரம்வளர்வெடிகாரம்
நாளுடன்லிங்கம்நல்லகெவுரியுஞ்
சேலுடன்நாகஞ்செப்புநிமிளையே. 357

நிமிளைகாரீயம்நின்றகல்நாருடன்
குவளைஅவத்தங்கொடியநல்மித்துரு
தமியையறிந்துதனதாய்வகையுடன்
உமிளைப்பாடாமலுகந்துநீபாருமே 358

பார்வெடியுப்புப்பணியுநலசத்துரு
காரீயம்ரெண்டுங்கடிவதோர்கூடலுந்
சார்சவுடுதனிப்பச்சைவெள்ளியுங்
கோரஇரும்புக்கூர்காந்தத்தொட்டியே. 359

தொட்டியசெம்புசூர்சிலைகெந்தி
கட்டியகாந்தங்கடுஞ்சிங்கராசா
கொட்டியவண்டங்கொடுஞ்சுரைக்கெந்தியும்
விட்டதீமுறுவல்வேண்டுஞ்சத்துருமே. 360

கல்லுப்புசத்துருமித்துரு.

சத்துருதன்னைசாத்திரனும்நன்றாய்
மித்துருவாதவிளங்கிடக்கேளு
சுந்தும்படிக்குச்சொரிந்தகல்லுப்பு
முத்தியகாரமுடிலிங்கவீரமே. 361

வீரானதுத்தம்விளங்கியதாரமும்
காரானைத்தந்தங்கடல்நுரைநாகமும்
நாராநிமிளைநல்ரோமங்கம்பிளி
பாரனமித்துருப்பார்த்துமுடித்திடே. 362

முடித்தகல்லுப்புக்குமுன்னானமித்துரு
அடுத்தஇரும்புஅதிபூரம்செம்புடன்
தொடுத்தவெங்காரஞ்சொன்னகெவுரியுங்
கடுத்தநல்நாகமுங்காந்தமுந்தாரமே. 363

தாரநிமிளைத்தனிவெள்ளைப்பாஷாணம்
பாரஅப்பிரகம்பருலிங்கவங்கமும்
நேரானமித்துருநிலையையறிந்தபின்
பேரானசத்துருப்பெருமையைக்கேட்டிடே. 364

கேட்டிடுவீரங்கெடியபரசலத்தமும்
வாட்டுஞ்சவுடுவருசிங்கிதன்னொடும்
பூட்டும்பவளப்புத்துமனோசிலைத்
தாட்டும்பழம்புளித்தன்னொடுசத்துரே. 365

காரமித்துருசத்துரு.

தன்னொடுகாரசத்துருதன்னையே
வின்னமில்லாமல்விளங்குஞ்சலாசத்து

உன்னும்புளியண்டமூடன்கூடன்பூரமும்
சுன்னவகையெல்லாஞ்சுழல்காசத்தாரே. 366

காரத்தின்மித்துருக்கட்டுடன்சொல்லுவேன்
பாரத்துபரசம்பாஷாணவர்க்கங்கேள்
சேரொத்தலோகங்கள்சிறந்தமித்துருவிது
நேரொத்துப்பார்த்துநிலைத்துமுடித்திடே. 367

தங்கசத்துருமித்துரு.

நிலைத்தநல்சீனத்தின்நேர்மையின்சத்துரு
உரைத்ததோர்காரத்திலுண்மையறிந்திடு
அலைத்தநல்மித்துருஅப்படியாகிடும்
பிலத்துடனறிந்துபேணிக்கண்டிடே. 368

கண்டிடுதங்கத்தின்கதித்தநல்சத்துரு
விண்டிடுநாகம்விளங்கியலிங்கமும்
பண்டுறுபச்சையும்பருத்தநால்நிமிளையும்
இண்டுநல்கெவுரியும்இனங்கனும்வெள்ளையே. 369

வெள்ளைசவுடுவிளங்கியதாளகந்
துள்ளியசிந்திக்காலங்குமமேருசிலை
கொல்லுமப்பிரகங்கொடியசிவிங்கியுந்
துள்ளியகுதிரைப்பல்குதுமண்டமே. 370

அண்டமாங்கெந்தியகோபமுகிகாந்தமும்
பொன்றியவீரமும்பொன்னம்பர்சத்துரும்
நன்றிருசத்துருநயமாய்ப்புனைந்திட
கொன்றிடுமென்றுகுறித்திடுந்திண்ணமே. 37

திண்ணமதாகச்செப்புவேன்மித்துரு
சொன்னசத்துருவதைத்தொகுத்துஅகற்றியே
என்னசாக்கிலிதுமித்துருவெனத்
தன்னமைபாகச்சாதிப்பார்க்கிடே. 37

பார்த்திடுஞ்சூகம்பரிசிக்குஞ்சத்துரு
சேர்த்திடுவெள்ளைகெவுரி நல்சிங்கியும்
சாத்தியசத்திசாரங்குதிரைப்பல்
காத்திடுரும்புகடுவெடிகாந்தமே. 373

காந்துபொன்னம்பர்க்கடுபூரகூடனும்
நீந்துகல்சவுடு நிமிளைபூனீறுடன்
பாந்துருவாகப்பத்திசத்துருந்
சேந்தநிந்தகனைசெலுத்துவர்திண்ணமே. 374

ஆபாசத்துருமித்துரு.

திண்ணமநாகச்சிறந்திடுமித்துரு
நன்னப்பிரேகம்நாகமுங்காரியம்
அன்னயகெந்தகம் அணிசிலைவங்கமுந்
இன்னமாதொட்டியுஞ்செய்தாரவீரமே. 375

வீரகல்வெள்ளியும்விளங்கியசெம்புடன்
கார்பச்சைச்சாரங்காரமுந்துத்தமும்
பாரஞ்சனக்கல்பாரதிமுறுவலுஞ்
சோவிதுவெல்லாஞ்சேர்ந்தமித்துருவென்னே. 376

என்னமோவென்றுஇறுகாதயிருமபுக்கு
வின்னமாசத்துருவெண்காரம்வெங்கலம்
கன்ன அப்பிரேகங்காரணயத்தோடுடன்
என்னநிமிளையுமேற்சிலைவங்கமே. 377

வங்கங்கிளிஞ்சிவளர்கெந்திசாரமும்
அங்கந்திராச்சிங்கியானகெவுரியும்
பொங்கியவெள்ளைப்பூக்கும்பூனீறுஞ்
செங்கைசலாசத்துசேரவுஞ்சத்துரே. 378

சேருமிரும்புக்குத்திறமானமித்துரு
நேர்வெள்ளிநாகமும்விநடியகபரியும்
பார்காரந்தபூரம்பழுத்திடுஞ்செம்பு
கூரேசவர்த்தங்கொடியபூநாகமே. 379

நாசமாந்தங்கம்கெந்திசெம்பும்
வாகுடன்கூடன்மயூரசெம்புடன்
பாகுடன்கூட்டம்பருத்தஇரும்புக்கு
தாகமித்துருவெனச்சாத்துமென்னறிகே. 380

காந்தசத்துருமித்துரு

எண்ணியகாந்தமியல்பாணுலுக்குந்
தண்ணியமித்துருசத்துருகேட்டிடு
நண்ணுமிரும்புக்குநாட்டும்வகையதை
உண்ணியுறைத்துவுண்மையாய்ப்பார்த்திடே. 381

பார்த்திடுநாகம்பதறியசத்துரு
போத்துங்கிளிஞ்சிப்பொருந்தியஅண்டமும்
காத்துவெடியுங்கள்ளுப்புவங்கமும்
ஆத்தும்படிகமருளானசங்கமே. 382

தங்கந்திராவந்தளிவெள்ளிவெங்கலம்
பொங்குநண்டோடுபதுவீரசிங்குடன்
அங்கமிளகுஅவின்வெள்ளைபாஷாணம்
மங்தும்வழலைவளரன்னபேதியே. 383

நாகசத்துருமித்துரு.

பேதித்தநாகப்பெருமைதன்சத்துரு
சோதித்துப்பார்த்துத்துருவத்தில்நின்றிட
வாதித்தமித்துருவுண்மைவகையதை
போதிப்போங்கண்டிடுபூரணந்தன்னிலே. 384

தன்னுணகாந்தமுந்தனிஅப்பிரேகமும்
பொன்னும்நிமிளைப்பொருந்துஞ்சலாசத்து
சென்னியசூரஞ்செப்புங்கெவுரியும்
கன்னுணகெந்தியங்கரும்பூநாகமே. 385

நாகம்பூரஞ்செம்புகருநாகம்
பாகமிச்சாரம்பதிவாலிகையெலாம்

ஏகயிரும்புக்கிதில்லானமித்துரு
ஆகமதாக அறிந்துகொள்ளுண்மையே. 386

காரீயஞ்சத்துருமித்துரு.

உண்மையாய்காரீயமுருகுஞ்சத்துருவதை
தன்மையாய்ச்சொல்லுவேனுடுமயக்காந்தம்
தன்மைகிளிஞ்சித்துருவண்டநாகமும்
வண்ணங்கெவுரிவருநத்தைகெந்தியே. 387

கெந்திகற்சுன்னங்கேளுநசத்துருவீது
பந்தியமித்துருபகருவதுகேள்
அந்திமயூரமதிலுடசெம்புவும்
குந்துபூநாகங்கூர்நாகஞ்செம்புமே. 388

செப்புவெள்ளீயஞ்சேர்வங்கூரமும்
வம்புமித்துருவென்வகையையறிந்திட
அம்புவிதன்னிலறிவார்பெரியோர்கள்
நம்புவாரப்பதம்நாட்டங்கள்காணுமே. 389

காணும்வெள்ளீயங்கருவாம்செயம்பன்னை
வேணுமேசத்துருமித்துருஒன்பதாய்
பேணுகாரீயமும்பெருந்துத்தஞ்சூதமும்
ஊணுமேசத்துருமித்துருஉகந்திடே. 390

உகந்தசரக்கைஉரிமையாய்க்கண்டிட
நகர்ந்திடுஞ்சத்துருதன்னால்
அகந்திடப்படவென்றமர்த்தியிருத்திட
ஜெகந்தனில்சித்தனாய்சித்துபெருகுமே. 391

பெருகுஞ்செகந்தனில்பேரானசித்துகள்
தருகியேமித்துருசத்துருதன்னையே
உருகியறிந்துவுண்மையகற்றிடார்
திருகும்பிறவியில்செனித்துயில்வார்களே. 392

உழன்றுதவித்துவுறுவ றியாமல்
தழன்றேயறிவதுதானேமயங்கிடுஞ்
சுழன்றிடுகாயச்சுழியிலமைந்திடுங்
கழன்றிடும்வாசிக்கதருஞ்சத்துருவதே. 393

சத்துருமித்துருதன்னையறிந்துநீ
புத்தியுடனேபொருந்த அகற்றிடு
அத்தனருளாலகற்றுவதென்றல்லால்
மற்றதுமனதுறவளருஞ்சாரணையிதே. 394

சாரணைதீர்ந்திடுந்தாக்குமனேன்மணி
காரணமாகக்கருத்திலடங்கிடுந்
தாரணமானதனுவும்பிலத்திடும்
பூரணவாசியும்புத்தியில்செல்லுமே. 395

புத்தியில்வாசிப்புகுந்துறவாகிலுல்
நெற்றிக்கண்ணின்றுநேரேதுலங்கிடும்
நத்தும்புருவநடுவின்புடதியில்
உய்த்துநீபாருஒளிகொண்டதீபமே. 396

தீபந்துலங்குந்திறத்துசொல்லுவோம்
பாபமிகுந்தப்பருபுளிவெண்ணெயும்
கோபமிகுந்தக்கொடும்பாக்கிலைச்சுண்ணஞ்
சாபம்விளக்குந்தனிமீனிறைச்சியே. 397

இறைச்சிமுதலாயவைகளகற்றிநீ
நிறைச்செந்தமுதுநேருடன்கொண்டிடு
உறைச்சிதுகற்பமுண்மையாம்பூரணம்
அறைத்திதுபாருஆனந்தபோதமே. 398

போதமாநின்றபூரணந்தன்னையே
நீதமாய்க்கண்டுநின்மனம்போற்றிலுல்
பாதமடிமுடிப்பத்தியதீபமுஞ்
சோதிமயமெனத்தாண்டியநாதமே. 399

நாதமும்விந்துவும்நயமாயறிந்துநீ
நீதமாயந்த நிலையினில்வாசியை
பேதம்வராமல்பினைத்துஇருத்தினால்
பூதமொடுங்கிப்பொருந்துஞ்சுழியிலே. 400

சுழியினில்வாசிசுழன்றுருகாமலே
வழிதுறைகண்டுவாசியையேற்றிடு
அழிபடுதேகமாதி நிலைத்திடும்
முழிநடுசிக்கெனமுன்னிலைப்பின்னே. 401

பின்னிலைப்படதிப்பெருகியபூரணத்
தன்னிலையதுவெனச்சார்ந்துகுறித்திடு
வன்னியும்வாசியும்வளருங்குகையது
சென்னியின்பாதந்தெட்சணமாகுமே. 402

ஆருநல்தெட்சணம்அகமதிலீசனும்
வாருடனறிவாய்வளருநற்றீபமாய்
போகம்பெருகிப்பூரணகெங்கையாம்
ஏகமாயெங்குமிருந்ததைக்கண்டிடே. 403

கண்டுபிடித்துக்கலையெறிந்திடு
அண்டியேஆவியதனுள்ளடங்கி
மண்டியவாசிமதியுடன்சேர்த்து
நின்றாவியிடம்நேர்ந்ததுவுண்மையே. 404

உண்மையிப்படியென்றுகந்துநீவாசியைத்
தண்மையிதென்றுசார்ந்துசெலுத்தினால்
சின்மயமாகிசிறக்குஞ்சிவயோகம்
நன்மையிதெனவேநாட்டங்கள்கண்டிடே. 405

நாட்டங்கண்கூசும்நன்றுயருட்டிமேல்
ஏத்திடுவாசியேகாந்தபோதமாம்
வாட்டங்களில்லைமனையுந்திறப்படும்
தேட்டங்களென்னசிவயோகஞ்சித்தியே. 406

சிந்தைபஞ்சாட்சரந்தெவிட்டசெபித்திடு
அந்தியுஞ்சந்தியும் அந்த நிலையில் நில்
சொந்தமாய்மூலச்சுடரதெழும்பியே
புந்தியில் நின்றதுபூரணமாகுமே. 407

பூரண தீட்சைப்பொருந்துமெண்ணூறில்
பூரணமென்றபுதுமையறிந்திலார்
பூரணமானபுதுமையறிந்தவர்
பூரணகெங்கையைப்போதிப்பான்கண்டிடே. 408

செயநீர்

கண்டரூபத்திறுவுசரக்குக்குங்
கொண்டிடசெயநீர்க்குருமுறைசொல்லுவேன்
நின்றதோர்பூவில்நேர்வீரசாரமுந்
சென்றிடப்பொடித்துச்சேருபீங்கானிலே. 409

பீங்கானிலிட்டுப்பேணிப்பனியில்வை
பாங்கானசெயநீர்பருகிப்பெருகிடும்
தூங்காமல் நின்றுசொலித்திடு நீரதை
வாங்கிடு குப்பியில்வளமதில்ரொம்பவே. 410

வளமதில்சாக்கைவாட்டித்துவைத்திட
செலமதில்நன்மையாய்த்தீர்க்கமாய்க்கட்டிடும்
நலமுடன்கட்டின நல்லசரக்கினில்
பலனதிலுண்டெக்குவங்கண்டிடே. 411

கண்டிடக்கேளுகந்தமெழுகுநீர்
உண்டிடும்பூவுடன்சாரப்பர்சையும்
விண்டிடும்பூரம்விதிக்கவொன்றாகவே
சென்றிடக்கூட்டிசெயநீர்விட்டாட்டியே. 412

ஆட்டியெடுத்துக்கண்ட பீங்கானில்வை
நாட்டும்பனியில்நல்லசிவமாகும்
ஊட்டுகல்குப்பியில்உடன்வீரந்தாக்கிடுந்
தேட்டுடன்நீறுஞ்சிவந்திடும்பாருமே. 413

பாருஞ்செயநீரில்பட்டசாங்குகள்
நேருடனொட்டநிலைத்தமெழுகதாம்
சேருள்ளமெழுகதில்சிந்துவிளைந்திடும்
காருநல்லோகங்கதிக்கப்பழுக்குமே. 414

பழுக்கும்வகைகளைப்பகருவேன்மக்களே
அழுக்குமனத்தையறுத்து அகற்றிடு
தழுக்கும்பிறவித்தாரைக்களைந்திடுஞ்
செவிக்குமுள்ளமயஞ்சிவபோகஞ்சென்றிடே. 415

சென்றிடும்போதுரேச்சிவமயம்
கண்டிடும்போதுகண்ணல்லமமாம்
விண்டிடும்வார்த்தைவிளங்கியமந்திரம்
நின்றிடும்பற்பம்நேர்தனைக்கேட்டிடே. 416

பற்பவகை.

நேர்வெடியுப்புநிலையானசீனமுங்
கார்சிப்பித்தோடுங்கதிக்கச்சரியிடை
வீருற்றசெயநீர்விட்டேயரைத்திடு
வாரிருசாமம்வகைநாலரைத்திடே. 417

அரைத்ததைவில்லைபாக்கிரவியினில்
விரைத்திடும்போட்டுவிரும்பியெடுத்திடு
வுரைத்திடவோட்டில்ஒடுக்கிமண்சீலைசெய்
திறத்துடன்கெசப்புடந்தீர்ந்துஎடுத்திடே. 418

துருசு சுன்னம்.

எடுத்திடச்சுன்னமென்னென்றுசொல்லுவேன்
தொடுத்திடுமுப்பூச்சுன்னத்தினையிது
அடுத்தசரக்கைஅதட்டிநொருக்கிடும்
விடுத்ததுருசுவெண்மையைக்கேட்டிடே. 409

கேட்டிடுஞ்சுன்னங்கெடியானவீரமும்
நாட்டிச்சரியிடைநல்லநீர்கூட்டியே

சிந்தைபஞ்சாட்சரந்தெவிட்டசெபித்திடு
அந்தியுஞ்சந்தியும் அந்த நிலையில் நில்
சொந்தமாய்மூலச்சுடரதெழும்பியே
புந்தியில் நின்றது பூரணமாகுமே. 407

பூரண தீட்சைப்பொருந்துமெண்ணூறில்
பூரணமென்றபுதுமையறிந்திலார்
பூரணமானபுதுமையறிந்தவர்
பூரணகெங்கையைப்போதிப்பான்கண்டிடே. 408

செயநீர்

கண்டறுபத்திலுவசரக்குக்குங்
கொண்டிடசெயநீர்க்குருமுறைசொல்லுவேன்
நின்றதோர்பூவில்நேர்வீரசாரமுந்
சென்றிடப்பொடித்துச்சேருபீங்கானிலே. 409

பீங்கானிலிடப்பேணிப்பனியில்வை
பாங்கானசெயநீர்பருகிப்பெருகிடும்
தூங்காமல்நின்றுசொலித்திடு நீரதை
வாங்கிடு குப்பியில்வளமதில்பொம்பவே. 410

வளமதில்சாக்கைவாட்டித்துவைத்திட
செலமதில்நன்மையாய்த்திர்க்கமாய்க்கட்டிடும்
நலமுடன்கட்டின நல்லசரக்கினில்
பலனதிலுண்டிடக்குவங்கண்டிடே. 411

கண்டிடக்கேளுகதித்தமெழுகுநீர்
உண்டிடும்பூவுமுடன்சாரப்பார்சையும்
விண்டிடும்பூரம்விதிக்கவொன்றாகவே
சென்றிடக்கூட்டிசெயநீர்விட்டாட்டியே. 412

ஆட்டியெடுத்து அகண்டபீங்கானில்வை
நாட்டும்பனியில்நல்லசிவமாகும்
ஊட்டுகல்குப்பியில்உடன்வீரந்தாக்கிடுந்
தேட்டுடன்நீறுஞ்சிவந்திடும்பாருமே. 41

பாருந்தெயநீர்ப்பட்டசாங்குகள்
நேருடனொட்டநிலைத்தமெழுகதாம்
சேருள்ளமெழுகில்சிந்தவிளைந்திடும்
காருநல்லோகங்கதிப்பழுக்குமே. 414

பழுக்கும்வகைகளைப்பகருவேன்மக்களே
அழுக்குமனத்தைஅறுத்துஅகற்றிடு
தழுக்கும்பிறவித்தாரைக்களைந்திடுஞ்
செவிக்குநன்றாயுஞ்சிவயோகஞ்சென்றிடே. 415

சென்றிடும்போதுநேர்சிவமாம்
கண்டிடும்போதுகண்ணைவளமையாம்
விண்டிடும்வார்த்தைவிளங்கியமந்திரம்
நின்றிடும்பற்பம்நேர்தனைக்கேட்டிடே. 416

பற்பவகை.

நேர்வெடியுப்புநீலபாணிலூறன்
கார்சிப்பிதேநாடுங்கதிக்கச்சரியிடை
வீருற்றசெயநீர்விட்டேயரைத்திடு
வாரிருசாமம்வகைநாலரைத்திடே. 417

அரைத்ததைவில்லைபாக்கியவெயிலினில்
விரைத்திடுபோட்டுவிரும்பியெடுத்திடு
வுரைத்திடவோட்டில்வைத்திமன்சீலைசெய்
திறத்துடன்கெசபுடந்தீர்ந்துஎடுத்திடே. 418

துருசு சுன்னம்.

எடுத்திடச்சுன்னமென்னென்றுசொல்லுவேன்
தொடுத்திடுமுப்பூச்சுன்னத்தினையிது
அடுத்தசரக்கைஅகட்டிநொருக்கிடும்
விடுத்ததுருசுவெண்மையைக்கேட்டிடே. 409

கேட்டிடுஞ்சுன்னங்கெடியானவீரமும்
நாட்டிச்சரியிடைநல்லநீர்கூட்டியே

ஆட்டியே பச்சைய நந்த இடைக்கிதைப்
பூட்டிமண் சீலைப்பொருந்த அழுத்திடே. 420

அழுத்துகணக்கு அறிந்து புடமிட
வெளுத்திடுஞ் சுன்னம் விரும்பியெடுத்திடு
துளுத்திடுஞ் சுன்னந் துருசுக்குருவதால்
நெளித்தசரக்கை நீற்றிடும்பாரே. 421

சாரச்சுன்னம்.

பார் சாரச்சுன்னம் பகருவேன் மக்களே
வீரான பூவும் வெடியுடன் பச்சையும்
நேரான வீரமும் நேர்சரியாகவே
காரான சாரமுங் கல்வத்தரைத்திடே. 422

அரைத்த மருந்தை அடைபோல் பிடித்து நீ
நிரைத்தரவியில் நீர்காயப்போட்டிடு
அரைத்திடு ஓட்டில் மண்ணாது செய்துமே
சிறத்துடன் புடமது செம்மையாய்ச் செய்திடே. 423

செய்திட்டுப்பாரு செயசாரம் நீறியே
கொய்திட்ட சுன்னங் கொடுஞ்சுருக்காய்விடும்
றவதிட்டவாதிக்குமார் பாணியானது
மெய்யுற்றசாரம் விசையான சுன்னமே. 424

கல்லுப்புசுன்னம்.

சுன்னமாய்க் கல்லுப்பைச் சொல்லுவேன் மக்களே
தின்னமாஞ் சூடனுஞ் சேர்வெடி சாரமும்
வன்னமாம் பச்சை வளர்வீரந் தன்னோடு
சொன்ன கல்லுப்புடன் தோன்றவெடுத்திடே. 425

எடுத்திட்டரைத்திடு ஏகமாம் நீரதில்
தொடுத்திடு வில்லையைச் சுருளாவியிடு
படுத்திடு ஓட்டில் பதிய மண் சீலைசெய்
கொடுத்திடு புடத்தில் கொடுஞ் சுன்னமாகுமே. 426

ஆகும்கல்சுண்ணமாருமறிந்திலர்
வாகுடன்பேசிவசையிடுமாந்தரைப்
பாகுடன்கூடிப்பயின்றுதிரியாதே
ஆகமநூலைபறிந்துபிழைத்திடே. 427

பிழைத்திடவேண்டிப்பேசினேன்மக்களே
நிலைத்திடுங்காரம்நேர்மையின்சுண்ணத்தை
தழைத்திடக்கேளுதன்னிருவீரம்
அழைத்திடும்வெடியும்ஆனதோர்பச்சையே. 428

பச்சைச்சரியிடைப்பகுந்தவெண்ணீறதில்
இச்சையாயாட்டிபெருத்திடுவில்லைபோற்
வச்சிடுவோட்டில்வளாய்பெறச்சிலைசெய்
நிச்சயமாகநிறுத்துப்புடமிடே. 429

புடமிதில்காரம்பொருந்தியசுண்ணமாம்
அடைவுடன்சுண்ணமாருமறிந்திலார்
திடமானலோகம்க்ஷணத்திலுருகிடும்
விடமானகாரம்வெண்சுண்ணமார்க்கமே. 430

சீனச்சுண்ணம்.

மார்க்கமதாகவமுழ்த்துவோங்கேளு
தீர்க்கமாஞ்சீனச்சிறந்திடுஞ்சுண்ணத்தை
யோர்க்கையாய்சொல்லுவோமினியபூச்சூடனு
தீர்க்கமாய்வீரனுந்திறமானகம்பியே. 431

நம்பியேபொடொன்றாய்க்கலக்குடன்கூட்டியே
நம்பியசீனம்நாட்டிஅரைத்திடு
வெம்பவுருட்டிவெயிலிலுலர்த்தியே
பண்புடனோட்டில்பதித்துமண்சிலையே. 432

சீலைமண்செய்துதிடமாய்ப்புடமிடு
ஆலையமாகஅமர்த்திபெரித்திடு
சூழநற்சீனந்துலாம்பரமாகவே
வேலைசாதிக்கவெண்சுண்ணமாகுமே. 433

## நாகச் சுன்னம்.

ஆகுமே நாகமதிகமாஞ் சுன்னத்தைப்
பாகமதாகப்பண்புடன்பார்த்திட
வாகுடனுகம்வளர்கூதங்கூட்டியே
ஏகமாம்வீரமெழில்பச்சைபூரமே. 434

பூரமுங்கம்பியும்பொருந்தவொன்றாகவே
காரமாம்நீரில்கதிக்கவரைத்திடு
வாருடன்கூட்டிவட்டமதுபண்ணியே
நீரதுகாயநிலைவாயுலர்த்திடே. 435

உலர்த்திடும்பில்லையைப்போட்டுலைத்திடு
பிலத்துடன்மண்ணைதுபோணிப்பிடித்திடு
குலத்துடனொருவைக்கூட்டிப்புடமிட
நிலத்தினில்நாகம்நிலைபாகசுன்னமே. 436

## வங்கச் சுன்னம்.

சுன்னமாய்வங்கத்தைச்சுட்டுவெண்மக்களே
தின்னமாம்வங்கமுஞ்செப்புநபச்சையும்
துண்ணுதவீரமுஞ்சூடனுங்கம்பியும்
ஒண்ணுகக்கூட்டியுருட்டியரைத்திடே. 437

அரைப்பதுநன்றாயரைத்துத்திரட்டியே
விரைத்திடரவியில்விரும்பியெடுத்திடு
இறத்துடனோட்டில்நிறமாயமர்த்தியே
நிறைத்திடுசீலைமண்நீர்செயமாகவே. 438

ஆகஎருவிலமர்த்திப்புடமிட
வேகமாய்நீறிவெளித்திடுஞ்சுன்னமாய்
ஆகமந்தோறுமறியாரிச்சுன்னத்தைப்
பாகமாய்ப்பார்க்கப்படுத்திடும்வேதையே. 439

### காரீயச்சுன்னம்.

வேதைக்குநல்லவிளங்கியகாரீயம்
வாதிக்குச்சுன்னம்வயணம்வழுத்துறேம்
நீதிசேரீயமும்னோர்குகங்கட்டியே
சாதிசேர்பச்சையுநீதுங்கெடுவீரமே. 440

வீரமுங்கூடனும்விளங்கியகம்பியும்
நேருடன்கூட்டுநெட்டடங்காட்டியே
சீருடன்வில்லையிறக்கப்பிடித்துநீ
நாருடனெட்டிஸ்கரித்துமேல்மூடியே. 441

மூடியைசீலைமூடிவேப்தரித்துநீ
மாடுடனெருவில்வைத்துப்புடமிடக்
கூடுடநீயுங்குழன்றுபொருமியே
வாடியெரித்துவழுத்தியஞ்சுன்னமே. 442

சுன்னப்பெருமையைச்சொல்லமுடியாது
விண்ணிருந்துதம்விளைந்துமடிந்திடும்
நண்ணியவேதைக்குநாடுந்திறவுகோல்
எண்ணந்துறைக்குஇதுகுருபீடமே. 443

### வெள்ளிச்சுன்னம்.

குருவானபீடங்குறித்திடுவெள்ளியைத்
திருவானசுன்னமாய்த்திரும்வரிசைகேள்
கருவானருத்ரன்காரங்கங்கட்டியே
புருவானவெள்ளியொன்றாய்ச்செலுத்துவே. 444

செலுத்திப்பொடித்துச்சீர்வெடியுப்புடன்
கழுத்திடுகூடனுங்காரபச்சைவீரனும்
அழுத்தமாய்க்கூட்டிஅமையஅரைத்திடு
வழித்துவுருட்டிவட்டதுபண்ணுமே. 445

## நாகச் சுன்னம்.

ஆகுமேநாகமதிகமாஞ்சுன்னத்தைப்
பாகமதாகப்பண்புடன்பார்த்திட
வாகுடனுகம்வளர்சூதங்கூட்டியே
ஏகமாம்வீரம்எழில்பச்சைபூரமே. 434

பூரமுங்கம்பியும்பொருந்தவொன்றாகவே
காரமாம்நீரில்கதிக்கஅரைத்திடு
வாருடன்கூட்டிவட்டதுபண்ணியே
நீரதுகாயநிலைவாயுலர்த்திடே. 435

உலர்த்திடும்பில்லையைப்போட்டிலைமத்திடு
பிலத்துடன்மண்ணதுபோணிப்பிடித்திடு
குலத்துடனெருவைக்கூட்டிப்புடமிட
நிலத்தினில்நாகம்நிலைபாகசுன்னமே. 436

## வங்கச் சுன்னம்.

சுன்னமாய்வங்கத்தைச்சூட்டுவேன்மக்களே
திண்ணமாம்வங்கமுஞ்செயகூதபச்சையும்
துண்றாதவீரமுஞ்சூடனுங்கம்பியும்
ஒண்றாகக்கூட்டியுருட்டியரைத்திடே. 437

அரைப்பதுநன்றாயரைத்துத்திரட்டியே
விரைத்திடரவியில்விரும்பியெடுத்திடு
திறத்துடனோட்டில்திறமாயமர்த்தியே
நிறைத்திடுசீலைமண்நீர்செயமாகவே. 438

ஆகஎருவிலமர்த்திப்புடமிட
வேகமாய்நீறிவெளித்திடுஞ்சுன்னமாய்
ஆகமந்தோறுமறியாரிச்சுன்னத்தைப்
பாகமாய்ப்பார்க்கப்பழுத்திடும்வேதையே. 439

காரீயச்சுன்னம்.

வேதைக்குநல்லவிளங்கியகாரீயம்
வாதிக்குச்சுன்னம்பண்ணம்வழுத்துறேம்
நீதிசேர்பழம்பனோர்குதங்கட்டியே
சாதிசேர்பச்சையுந்தன்றொடுவீரமே. 440

வீரமுங்கூடனும்விளங்கியகம்பியும்
நேருடன்கூட்டுநெட்டடங்காட்டியே
சீருடன்வில்லைசிறக்கப்பிடித்துநீ
தாருடனோட்டில்தரித்துமேல்மூடியே. 441

மூடினசீலைமூடியேந்தரித்துநீ
மாடுடனெருவில்வைத்துப்புடமிடக்
கூடிடநீயுங்குழன்றுபொருமியே
வாடிபொரிந்துவழுத்தியுஞ்சுன்னமே. 442

சுன்னம்பெருமையைச்சொல்லமுடியாது
விண்ணிடுஞ்சூதம்விரைந்துமடிந்திடும்
நண்ணியவேதைக்குநாடுந்திறவுகோல்
எல்லாந்துறைக்குஇதுகுருபீடமே. 443

வெள்ளிச்சுன்னம்.

குருவான்பீடங்குறித்திடுவெள்ளியைத்
திருவானசுன்னமாய்த்தீரும்வரிசைகேள்
கருவானசூதமுங்கார்வங்கங்கூட்டியே
யுருவானவெள்ளியிலொன்றாய்ச்செலுத்துவே. 444

செலுத்திப்பொடித்துசீர்வெடியுப்புடன்
கழுத்திடுகூடனுங்காரபச்சைவீரனும்
அழுத்தமாய்க்கூட்டிஅமையஅரைத்திடு
வழித்துவுருட்டிவட்டதுபண்ணுமே. 445

பண்ணியவட்டைப்பாலுவில்சுண்டிட
நண்ணியேபோட்டுநாடியெடுத்துமே
தண்ணியகல்லில்தரித்துமண்சீலைசெய்
சென்னியைநோக்கிச்சிவசிவாஎன்றுமே. 446

சிவசிவாவென்றுசெலுத்துப்புடத்திலே
தவமானவெள்ளீயஞ்சத்துமொன்றாகவே
அவமாகப்போன்றிஅலறிமடிந்திடும்
உவமானமில்லாஉண்மையுஞ்சுன்னமே. 447

உண்மையாய்நின்றஉறுதிமதியதை
தண்மையாய்நீற்றுந்தகைமையறிந்திலவர்
தண்மையாய்நீற்றுந்தகைமையறிந்தவர்
கண்ணிமைநாட்டுங்கைலாசவாசனே. 448

ஆயசுன்னம்.

வாசமயத்தைவழுவுள்ளசுண்ணமாம்
நேசமதாகநிறுத்துமுறைமைகேள்
ஆசானவங்கமும்ஆதிருத்தநாகமும்
பாசமாய்க்கூட்டிப்பருகப்பொடித்திடே. 449
பொடித்திட்டபத்தைப்போகுசரியிடை
வெடித்திடுபூப்பூணீரும்பச்சையும்
கடித்திடுங்கூடனுங்கனைக்குடன்கூட்டியே
வடித்தமெழுகுபோல்வணங்கஅரைத்திடே. 450
அரைத்திடுபழச்சாறுடையுடன்செயநீர்
திரத்துடன்விட்டுத்திர அரைத்திடு
வரத்துடனுரைத்துவட்டதுபண்ணியே
உரத்துடன்ரவியில்ஒன்றயுலர்த்திடே. 451
ஒன்றவுலந்துவருட்டிடும்வட்டத்தை
சென்றிட்டகலில்சேர்த்துமண்சீலைசெய்
நன்றிதுவென்றுநாட்டமுணர்த்துமேல்
சுன்றியெருவில்சொருகிப்புடமிடே. 452

படமதுநீராணம்பொருந்திப்படமிட
திடமூனாமூம்சேர்ந்துவெளுத்திடும்
விடமெனக்கொடியவெண்கன்னமாகுமே
கடமென்னவேலைக்குத்தாயுமானதே. 453

காந்தச்சுன்னம்.

ஆனதோர்காந்தமதிகநல்சுன்னத்தைப்
போனவேசொல்வேன்பிலனாகாந்தமும்
தோனாவிருப்புந்தொகுத்துப்பொடிசெய்து
வானவெடியுப்புவல்லீரப்பச்சையே. 454

பச்சைப்புடனேயாமானகூடனும்
வச்சஇடைக்குவளமாகக்கூட்டியே
நிச்சயமேரசிந்ரதுவெட்டு
அச்சமெரடுக்கஅரைத்துவழித்திடே. 455

வழித்துத்திரட்டிவளமாய்ப்புடமிடு
மூழித்துமருட்டிமூழுவெடிக்கூட்டியே
அழுத்தியரைத்துஅடையதுசேர்த்துமே
செழுந்திபெருவில்செயமாய்ப்புடமிடே. 456

புடமதுநீசயரப்போட்டுஎடுத்திடு
வடிவுள்ளகாந்தம்வளமாய்வெளுத்திடும்
அடிமுடியொன்றாயர்ந்திடுஞ்சுன்னத்தை
திட்டமுடன்காண்பவன்சித்தனுமாமே. 457

ஆகுமேசித்துஅவன்தேகஞ்சித்தியால்
போகுமேவேதைப்பொன்வெள்ளிரெண்டுக்கும்
வாகுடன்சுன்னம்வைப்புருசரக்கது
பாகுடன்செய்துபலனறிவார்களே. 458

தங்கச்சுன்னம்.

வாரானதங்கம்வளம்பெறச்சுன்னமாய்
காரானசெய்திகருமுறைசொல்லுவோம்

நோனகுதமும்நேரியவல்கமும்
போகவொன்றுப்பலக்கவுருக்கிடே. 459

உருக்கியசத்திலொன்றுடனிரண்டுசேர்
நெருக்கியதங்கம்நோய்நொறுங்கிடும்
முருக்கியவீரனுமுடிவெடியுப்புடன்
கருக்கியகூடனுங்காலானபச்சையே. 460

பச்சையோடொன்றுப்பதியக்கல்வத்தில்
வச்சரக்கைவளமையரைத்திடு
கச்சிநீறுங்கருப்பமுச்சாறுடன்
நிச்சயமாகநினைவாயரைத்திடே. 461

அரைப்பதுபோலவரைத்துத்திரட்டியே
உரப்படவில்லையுலர்த்திரவியினில்
இரப்படஅகலில்செலுத்திமவலிடு
மைப்புடன்புடத்தில்வாட்டியெடுத்திடே. 462

எடுத்துமறுபடியிறுகஅரைத்துமே
தொடுத்துமுன்போலத்துங்கப்புடமிடு
அடுத்தநல்தங்கம்உலர்ந்துமலர்ந்திடுந்
தடுத்திடுமேமருந்தான்சுன்னமானதே. 463

ஆனதோர்எமம்அடங்கியசுன்னத்தால்
வானவர்முனிவர்வளைதெரிந்தேயிருர்
கோனவனுனைகுருசவாமிசன்னந்தான்
பேணுவாய்லோகத்திலிறைத்திடவேமே. 464

எமத்தைநீற்றவரிதோவெண்மக்களே
வாமத்திறுமேலமனத்தையறிந்திடும்
காமத்தைவென்றகருணைக்கண்பார்த்திட
சேமத்தில்வாசிக்குநல்திடமே. 465

நிடங்கொழுந்துசிறந்திடுநாதந்
தாயத்தில்சூதந்துலக்கியவிந்து

நீடத்தியாக நின்ற நிலைதனில்
கோபத்தை நீத்தார்க்கும் மெனும் நாமே. 466

நாதமுங்கலந்துறைந்தவருடன் கூடினேன்
போதகம் நிறைந்து பூரணங்கண்டிடும்
நீதமாம் பூரணத்தே நற் நிலைகண்டுபின்
வாதமுங் கூடிய முமைந்திலிருந்தத்தமே. 467

சித்தமொன்றுமச்சிவயத்திற் கண்டபின்
முத்திக்கொழுந்து முளைகொண்டுலாவியே
பத்தியவிழ்ந்து பரானந்த முறும்
உய்த்துப்புணர்ந்து வொன்றாக நின்றதே. 468

ஒன்றுயிரண்டாயுடனதுமூன்றுமாய்
நின்றடிக்கொண்ட நினைவையறிந்திலார்
பண்டானசெய்திப் பகுதிமகடோர்க்
கண்டாருமில்லைக்கற்பத்தின்சாரமே 469

## கற்பசாரம்.

கற்பத்தின்சாரங்கருதுவோமக்களை
உற்பத்தியானவகையையறிந்திலார்
கற்பத்தில் நல்லசாரைவெண்சாரைதான்
சிற்பத்தில் காணசிவயோகஞ்சித்தியே. 470

சித்தம்பெருகிசிவஞானபோதகம்
சித்தம்பெருகிசிவயோகதீபமாம்
சுத்தமதாகத்துலங்கும்பதிதனில்
சுத்தமாய்நின்றசுடரானதீபமே. 471

தீபம்நிறைந்தசிவாநந்திமூலமாம்
தீபம்நிறைந்தசிவாயசிவமது
தீபம்நிறைந்தசிவாயசிவமதை
தீபத்தைநோக்கிசெலுத்திசெபித்திடே. 472

வல்லாரைதன்னைவணங்குமுறையதை
நல்லவுனக்குநயம்படச்சொல்லுவோம்
நல்லாருங்கண்டுதெளிந்திருந்திட்டார
வல்லாருகந்துவரைகடந்தார்களே. 480

## வல்லாரை.

கடந்தார்கள்மோகக்கன்வினையதைத்
தொடர்ந்தே அடித்துத் துருவத்திலேறினார்
படர்ந்தவல்லாரையைப்பத்திஎடுத்துநீ
அடர்ந்திடுங்காடியிதிருத்திப்பிழிந்திடே. 481

பிழிந்திட்டுவைத்துப்பேணிப்பொடிசெய்து
கலந்திடுஞ்சக்கரைக்கணக்குச்சரியதாய்
தெளிந்திடுமனத்தைத்திரதில்செலுத்தியே
அழுந்தியொருகடியன்பாய்ப்பொசித்திடே. 482

பொசித்திடுமண்டலம்பொருந்திஉள்கொண்டதால்
கசித்திடுஞ்சீதங்கழன்றுஇறக்கிவிடும்
நசித்திடும்பித்தம்நடுநிலைதன்னிலே
வசித்திடுந்தேகம்வரண்டுஇறக்குமே. 483

இறக்குமேதேகந்திருகந்ரோடியே
உறக்குமேவாசியுளநின்றுலாவிடும்
திறக்குமேமூலநிலைதனில்திடஞ்
சிறக்குஞ்சிவமாய்சிவமால்அண்டமே. 484

## கடுக்காய்.

அண்டங்கடுக்காயமறிந்திலார்
அண்டங்கடுக்காயருமையறிந்தவர்
அண்டங்கசடு அறுத்து அணைதனில்
அண்டத்தடுத்து அருபியுமானவனே. 485

செபகாலம்.

செபித்திடக்காலஞ்செப்புவேன்மக்களே
குவித்தெழுத்தையுங்கூறும்பஞ்சாட்சரம்
அவித்திடுமிரவியனையுமெழும்பிடும்
கபித்திடுஞ்சிந்தைதளராதுதிண்ணமே. 473

தளராமல்நீயுந்தன்னிலைப்பத்தியே
தளராமலந்தத்தானங்குறித்திடு
தளராதவிந்தைகண்டுசெலுத்தினால்
உழலாதுகாயமுண்மையிதுதிண்ணமே. 474

திண்ணமாய்நின்றுசெபமதுசெய்தபின்
உண்ணவேகற்பமுறுதிமனந்தேறும்
என்னமோவென்றிருந்தேந்துமருநாதே
பொன்னணிமூலம்பொருந்தியவாசியே. 475

வாசிமனோன்மணிமருவியசத்தியை
நேசமாமாலையில்நிறுத்திசெபித்திடு
தேசிகனைசிவமதுக்குறுதியாம்
பேசியசத்தியைப்பிலமாய்செபித்திடே. 476

பிலமாமனத்தைப்பிடித்துறவாகினால்
குலமானதேகங்குன்றாதொருநாளும்
நலமானவாசிநாடிவளர்ந்திடுந்
தலமானதீபந்தன்னருள்போதமே. 477

போதம்நிறைந்தபூரணவாயில்
நாதமும்விந்துவும்நாடியிருந்திடும்
பாதமடிமுடிப்பத்தித்தெளிந்தால்
வாதமும்வசியமும்வணங்குவதின்மையே. 478

திண்மையும்நன்மையுஞ்செகமயமாச்சுது
தன்மையாதலால்தானதுகண்டிட
வெண்மைவெளிப்படுமுறுதியுகந்திடுஞ்
செம்மையும்வெண்மையுஞ்சேரும்வல்லாரையே. ()

வல்லாரைதன்னைவணங்குமுறையதை
நல்லவுணக்குநயம்படச்சொல்லுவோம்
நல்லாருங்கண்டுளெளிதாயிருந்திட்டா
வல்லாறுகந்துவறைகடந்தார்களே. 480

வல்லாரை.

கடந்தார்கள்மோகக்கன்வினையதைத்
துடர்ந்தே அடுத்துத் துருவத்திலேறினர்
படர்ந்தவல்லாரையைபத்திஎடுத்துநீ
அடர்ந்திடுங்காடியிதிருத்திப்பிழிந்திடே. 481

பிழிந்திட்டுவைத்துப்பேணிப்பொடிசெய்து
கலந்திடுஞ்சக்கரைக்கணக்குச்சரியதாய்
தெளிந்திடுமனத்தைநேரில்செலுத்தியே
அழுத்தியொருகடியன்பாய்ப்பொசித்திடே. 482

பொசித்திடுமண்டலம்பொருந்திஉள்கொண்டதால்
கசித்திடுஞ்சீதங்கழன்றுஇறங்கிவிடும்
நசித்திடும்பித்தம்நடுநிலைதன்னிலே
வசித்திடுந்தேகம்வரண்டிறக்குமே. 483

இறக்குமேதேகஞ்சிறுக்குநோடியே
உறக்குமேவாசியுளநின்றுலாவிடும்
நிறக்குமேமூலநிலைதனில்தீபஞ்
சிறக்குஞ்சிவமாய்சிவமால்அண்டமே. 484

கடுக்காய்.

அண்டங்கடுக்காயாமறிந்திலார்
அண்டங்கடுக்காயருமையறிந்தவர்
அண்டங்கசடு அறுத்து அனைதனில்
அண்டத்தடுத்து அருபியுமாவனே. 485

அருபமாம் நின்ற அதிகடுக்காய்
குருமாப்பதி தனில்கூர்மையறிந்தபின்
குருமாப்பதி தனில்கூர்மையறிந்திடும்
பருமனும் நின்றதைப்பார்த்தெடுத்திடே. 486

எடுத்திட்ட மூரியிலியல்பாயழுத்தியே
விடுத்திட்டுலர்த்தி விதையதை நீக்கிடு
பொடித்திட்டத் தூளை போட்டிடுகாடியில்
மடித்திடவைத்துமறுநாளிருத்திடே. 487

இருத்திமறுநாளியல்பாயுலர்த்தியே
மருத்துநீயிப்படி வளமாகச்செய்திடு
திருத்தமாயிம்முறைசெய்திடும்பத்துதான்
வருத்தமாய்த்துருவம்வாங்கிவெளுத்துமே. 488

வெளுத்திடும்பொடியதைவெயிலிலுலர்த்தியே
அழுத்தமாயுரலிலழுத்தியிடித்திடு
செழித்திடும்பொடியைச்சேர்வச்சிரகாயமாய்
வழித்துப்பரணியில்வைத்துவிரையெடே. 489

எடுத்துவிதையைமிதமாயுலர்த்தியே
அடுத்துநொருக்கி அள்ளிடும்பானையில்
படுத்திசெட்டிப்பாணையவைதாய்
நடுத்தரமாகநாட்டித்தமரிடே. 490

நாட்டித்தமரிட்டு நன்றாய்மண்சிலைசெய்
வாட்டிமண்சிலைவளமாயுலர்ந்தபின்
தாட்டிகமாகத்தனதாய்ப்புடத்தினில்
நீட்டித்தயிலம்நினைவாய்வடித்திடே. 491

வடித்ததயிலம்வளமானகுப்பியில்
கொடுத்துநீமூடிக்குருவடிவணங்கிடு
அடுத்தகடுக்காய்சூரணந்தன்னிலே
அடுத்ததயிலமடைவாயெடுத்திடே. 492

அளவென்ன கூறணமாகுமிருவிரல்
பிலமான தயிலம்வேணுமொருவிரல்
நலமாயெடுத்துநன்றாயுருட்டியே
செலமான நாவில்செலுத்திமுழுங்கிடே. 493

செலுத்திமுழுங்கித்திரயாணமண்டலம்
அழுத்தமாய்க்கொண்டு அருள்வணங்கிடு
சலித்தமலமுஞ்சலமுமொன்றாக
நெளித்தபழுவுடனேராயிறங்குமே. 494

நேராயிறங்கிநிலைக்குமுள்வாசியுஞ்
சீராகநின்றுசித்துவளர்த்திடும்
பேரானநாசியிலபிலத்துநிலைத்தது
கூறானமூலங்குடியிருப்பாகுமே. 495

இருப்பானவீடுஎகவிருதயம்
குறிப்பானமூலங்குண்டலிசத்தியாம்
நெருப்பானசத்தியைநினைவாய்வணங்கினால்
வெறுப்பானதில்லைவேண்டுநற்காயமே. 496

காயாதிகற்பம்.

காயாதிகற்பங்கருவொன்றுசொல்கிறேன்
மாயாதிமூலமுப்வளருமுள்மூலமும்
ஓயாதசத்தியொளிகொண்டமூலமுந்
சாயாமல்மூன்றுந்தன்னுக்குள்பார்த்திடே. 497

பார்த்திடும்ரவிமதிப்பகருஞ்சுடருடன்
சேர்த்திடுமொன்றாய்த்திறமானசல்வத்தில்
நீர்த்திடுநாதநீர்வளங்கொண்டவைத்ததை
போத்திவழித்துப்பொருந்தத்திரட்டுமே. 498

திரட்டிரவிதனிற்சீராயுலர்ந்தபின்
உருட்டும்வட்டோட்டிலொடுக்கிமண்சீலைசெய்

சுருட்டிரவிதனில்சுண்டிபுலர்ந்தபின்
மருட்டியமாய்கையைவணங்கிப்புடமிடே. 499

வணங்கிப்புடமதுவைத்திடுங்குக்குடம்
இணங்கிடும்மூலமிருகிமலர்ந்திடும்
வணங்கியெடுத்துவழிவானசெம்பினில்
இணங்கியதனையியல்பாய்ப்பொடித்திடே. 500

பொசித்திடும்பணவிடைபொருந்து துவினில்
வசித்திடும்வாதமும்வாய்யபித்தமும்
நசித்துநடுங்கிநமனும்விலகிடும்
பசித்திடும்பூரணப்பற்பத்தின்தன்மையே. 501

தன்மைபொருந்துந்தனுவானதேகத்தில்
உண்மைரசவற்கமூட்டுமுறுதியாம்
நன்மையாய்நின்று நாடுசுருபத்தில்
புன்மையுடலைப்பொருந்தியறிந்திடே. 502

அறிந்தமனத்தாலாகிதிறப்படும்
அறிந்தமனத்தாலந்தந்திறப்படும்
அறிந்தமனத்தைஅன்புடன்பொருந்திறல்
விரித்திடும்வாசிவிசையிலொடுங்குமே. 503

சாரசுண்ணம்.

ஒடுங்கியதேகமுறுதிதிடப்பட
அடங்கியபற்பமறிந்துவுணர்ந்திடு
துடங்கியசாரச்சுன்னமருந்திறல்
றடங்கியஅசதிவலுக்குந்திண்ணமே. 504

திண்ணமாய்மண்டலஞ்செலுத்திடுஞ்சாரத்தை
உண்ணப்பயந்துஒடுங்கியிராதே
விண்ணங்களில்லைவிரசுக்கொடுத்திடு
அண்ணலெனக்குஅருளினவாறே. 50

வெடியுப்பு சுன்னம்.

வார்வெடியுப்புவளருமிச்சுன்னத்தை
காரிருமண்டலங் கரிந்துவுணர்ந்திட
சீர்சதைமாங்கிசந் திரமாய்வளர்த்திடும்
பார் நீர்ப்பணைப்புப் படைகயா திருக்குமே. 506

இருக்குமேதேகமெந்தநாளாகிலும்
உரைக்குமோவாசியுண்மைதிறப்படும்
பறக்கும் நரைதிரைப்பாரில்பசனையாம்
சிறக்குமேதிபஞ்சிவா நந்திமூலமே. 507

கல்லுப்புச்சுன்னம்.

மூலங்கல்லுப்புமுடித்திடுஞ்சுன்னத்தை
காலமேமண்டலங்கருதியுணர்ந்திட
சாலவே நரம்புத் தாணந்திருகிடும்
ஞாலமாந்தேகம் நலியாந்திருக்குமே. 508

காரச்சுன்னம்.

நலியாதகாரம் நாட்டியசுன்னத்தை
எளிதாகமண்டலமெடுத்திடுதேகத்தில்
பழியானபித்த நீர்ப்பணைப்புத்தெறித்திடும்
நெளியாதுவாசிநேர் நிலையுண்மையே. 509

சீனச்சுன்னம்.

உண்மையாஞ்சீனமுருகியசுன்னத்தை
நன்மையாய்மண்டலம் நாடியுணர்ந்திடும்
வெண்மைசிலேஷ்பனம்விளையாதறுத்திடும்
தன்மையிதென்றுசார் நந்திமூலமே. 510

தங்கச்சுன்னம்.

மூலமாந்தங்கமுகிந்திடுஞ்சுன்னத்தை
சாலவேமண்டலந்தாணதுவுண்டிடக்
கோலமாம்வாதங்கொடியநீரற்றிடுந்
தூலமேயில்லைசுருக்கிடுந்தேகமே. 511

வெள்ளிச்சுண்ணம்.

தேகமாம்வெள்ளிசெப்பியசுண்ணத்தை
ஆகமாய்மண்டலமதிற்கவுணர்ந்திட
தாகபாமூலத்தில்தனைகூடறந்திடும்
வேகமாந்தேகம்விசைகொண்டிருக்குமே. 512

இருக்குமுன்தேகம்சாந்தபோதமாம்
இருக்குமுன்தேகமென்றுனிறுபின்னை
இருக்கநடக்கஇளைபாறொருநாளும்
கருக்குமயிருங்காலனுமில்லையே. 513

ஆபச்சுண்ணம்.

காலாமிரும்புக்கருவானசுண்ணத்தை
நாளொண்ணிமண்டலம்நயமாய்பொருந்திடு
கோளாந்தசவாய்வுகூடிலகன்றிடும்
மாலாம்வைபசுமகாகோபுகாலமே. 514

காந்தச்சுண்ணம்.

காலமேநீயுங்காந்தநற்சுண்ணத்தை
பாலுடன்கூட்டிப்பருகிடுமண்டலம்
மேலுடன்காந்தலுமாம்வெக்கைவெதுப்புடன்
சூலையும்பாண்டுந்துலைக்குஞ்சிராணியே. 515

சிராணியுஞ்சோகையுங்கண்கண்டமாலையுந்
தீராதசளையுந்திறமானகுன்மமும்
பேரானகாந்தம்பெருமைமையக்கண்டே
நேராகநின்றநிலையைவிட்டோடுமே. 516

நாகச்சுண்ணம்.

ஓடுமேநாகமொடுங்கியசுண்ணத்தை
ஆடுடன்பாலிலருந்திடுமண்டலம்
கேடாங்கிராணிகிளம்பியமூலமும்
வாடாப்பவுத்திரம்வளருஞ்சிகூட்டமே 517

கூட்டமுடனேகொடியவியாதிகள்
நாட்டமென்றெண்ணிநடுங்கிஒடுங்கிடும்
ஈட்டமாய்நாகமியங்கியபற்பத்தால்
ஆய்டவியாதிகள் ஓடாதிருக்குமே. 518

வங்கச்சுன்னம்.

இருக்குமேவங்கத்தியல்பானசுன்னத்தை
கருத்துடன்வெண்ணெயில்காலமேமண்டலம்
திருத்தமாய்க்கொண்டிடிற்கமாய்நின்றிட
உருக்கவியாதியுடன்மேகந்தீருமே. 519

தீருமேமேகத்தினைவுவரட்சியும்
வீறுடன்கைகால்வெருட்புக்கறுப்புடன்
கூறுடன்தேகங்கொடியதோர்காந்தலும்
வேருடனற்றுவிலகியொடுங்குமே. 520

கார்வங்கச்சுன்னம்.

ஒடுங்கிநார்வங்கமுருகியசுன்னத்தை
அடங்கிநீமண்டலம்அருந்திடுந்தேனினில்
ஒடுங்கியமேகம்மூச்சுசுவாசமும்
இடங்கெட்டோமென்றனைமூந்திருந்தோடுமே. 521

ஓடும்விட்புருதியொடுக்கும்பாங்கிகள்
நாடுங்காலம்நடுங்கியசூலையும்
தேடுங்கைகாலில்திருகியபுத்துடன்
வாடிநடுங்கிமயங்கிக்குறிக்குமே. 522

மூலிகையின்பெயர்.

குறிநின்றமூலிகைகூறிடுவேன்கேட்டுத்
தறிசின்றமூலிதானைதில்பத்துண்டு
நெருக்குங்கதிர்நெல்லிசேர்சோதிவிருட்சமும்
கருக்குங்கொடிவேலிகள்கல்த்தாமரையென்னே. 523

